REGD. No. TN MS (C) 244
ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர்: 2 சென்னை 7—7—1978 வெள்ளி நிர்வாக ஆசிரியர்: ஏ. கே. வில்வம் எம்.எல்.சி. வெளியூர் 8—7—1978 சனி இதழ்: 258

## பொய்மையின் குத்தகைக்காரனுக்கு...

அரசியல் வாழ்வின் அந்திம நேரத்தில் இருக்கும் கருணாநிதியின் புலம்பல் நாளுக்கு நாள் விரசமாகி வருகிறது.

என்ன பேசுவதென்றே தெரியாமல் ஏதேதோ பேசுகிறார்.

அமைச்சர் காளிமுத்து ஒருமுறை குறிப்பிட்டது போல......

''ஜென்ம வாசனை செருப்பால்அடித்தாலும் போகாது'' போலும்.

இரும்புலிக்குறிச்சி என்ற ஊரில் நடந்த கூட்டத்தில் பேச்சு என்ற பெயரில் கருணாநிதி வாந்தி எடுத்ததை அவரது குடும்ப ஏடு இன்று வெளியிட்டு இருக்கிறது.

கண்ணொளி திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டு, பல இடங்களில் அது நடைபெற்றுக் கொண்டிருந்த நேரத்தில் மனோகரன் கழகத்தில் இருந்தார். அவர் ஒரு பெரிய கண்ணாடி வியாபாரியை அழைத்துக் கொண்டு வந்து அவர்மூலம் எல்லாக் கண்ணாடிகளையும் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கேட்டார்.

யோசிக்கலாம் என்று சொல்லிவிட்டுப் பிறகு விசாரித்துப் பார்த்ததில் மனோகரன் அந்தக் கண்ணாடி வியாபாரியிடம் பேரம் பேசிக்கொண்டு அந்தக் காரியத்தைச் செய்யச் சொல்கிறார் என்று அறிந்து மனோகரனுடைய சிபாரிசை நான் ஏற்றுக்கொள்ள முடியாது என்று கூறிவிட்டேன்.

அந்தக் கோபத்தை வைத்துக் கொண்டு இன்றைக்கு மனோகரன் கண்ணொளி வழங்கும் திட்டத்தில் ஊழல் நடந்தது என்று எல்லாம் பேசுகிறார்.

''உத்தம சிகாமணி'' கருணாநிதியின் பேச்சைப் படித்ததுமே உடம்பெல்லாம் எரிகிறது.

காலை முதல் இரவு வரை நீட்டிய கரங்களுடன் லஞ்சம் வாங்குவதையே பிறவி எடுத்த தன் பலன் என்றுகருதி ஊரை அடித்து உலையில் போட்ட மாபாவி-உலகமே மெச்சும்-அடக்கமும் அறிவும் கொண்ட ஒருவரைப்பற்றி வாய் கூசாமல் வசை பாடுகிறார்.

கருணாநிதி ஆட்சிக் காலத்தில் நாஞ்சிலார் டெல்லியிலேயே இருந்தார். நிர்வாகத்தில் தலையிடாதவர் என்று பெயர் பெற்றார்.

தமிழகத்தின் பெருமையை இந்திய அரசியல் அரங்கில் உயர்த்திக்காட்டிய நாஞ்சிலாரை-அனைத்து இந்திய அரசியல்வாதிகளாலும் அங்கீகரிக்கப்பட்டு அவர்களின் மதிப்பிற்குரிய நாஞ்சிலாரை-நாக்கில் நரம்பின்றி கூச்ச நாச்சமின்றி குறை கூறுகிறார் கொடும்பாவி.

நாஞ்சிலாரின் அரசியல் நேர்மையை நாடறியும்.

''தமிழகம் என்றாலே லஞ்சமும், ஊழலும் தான் நினைவுக்கு வருகிறது'' என்று அகில இந்தியாவும் காறித் துப்புகிற அளவிற்கு ஆட்சி நடத்திய பதரே......

''தமிழகத்தில் லஞ்சம் ஒரு நிறுவனமாகி விட்டது'' என்ற அவப்பெயரை உருவாக்கிய கருணாநிதியே......

உம்மைக் கேட்கிறோம்.

பதில் சொல்......

யார் அந்தக் கண்ணாடி வியாபாரி?

அவர் பெயர் என்ன?

அவரை உம்மிடம் நாஞ்சிலார் எப்போது அழைத்து வந்தார்?

பேரம் பேசியே பிழைப்பு நடத்தும் கருணாநிதியே...

உமக்கு...

**துணிவிருந்தால் ஆண்மையிருந்தால், திராணியிருந்தால்...**

**நீர் பேடி இல்லை என்பது உண்மையானால்-**

**அந்த விவரங்களை வெளியிடு-**

**நாஞ்சிலார் உம்மைச் சந்திக்க வேண்டிய இடத்தில் சந்திப்பார்.**

## தமிழக அரசுக்கு மத்திய அரசு இந்தியில் அனுப்பிய சுற்றறிக்கை

# புரட்சித்தலைவர் கடும் எதிர்ப்பு



சென்னை, ஜூலை 7- தமிழ்நாடு அரசுக்கு மத்திய அரசின் சுகாதாரத்துறை இந்தியில் அனுப்பிய சுற்றறிக்கைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் கடும் எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார்.

வழக்கமாக மத்திய அரசின் சுற்றறிக்கைகள் ஆங்கிலத்தில்தான் இருக்கும். அப்படியிருக்க இந்தியில் சுற்றறிக்கைகள் அனுப்புவது இந்தி திணிப்பு முயற்சியே என்றும் முதல்வர் குறிப்பிட்டார்.

இந்த தகவலை சென்னையில் நேற்று ஜனதா தலைவர் டாக்டர் சுப்பிரமணியம் சாமி எம். பி. தெரிவித்தார்.

நேற்று சென்னையில் நிருபர்களிடம் சுப்பிரமணியம் சாமி கூறியதாவது:

''சென்னையில் நான் தமிழ்நாட்டு முதல்வரை சந்தித்து பேசினேன். சமீபத்தில் தமிழ்நாடு அரசுக்கு மத்திய அரசின் சுகாதார இலாகாவிலிருந்து இந்தியில் சுற்றறிக்கை வந்திருப்பதாக அவர் என்னிடம் சொன்னார். முன்பெல்லாம் ஆங்கிலத்தில் தான் சுற்றறிக்கைகள் அனுப்பப்படும்.

ஆனால் இப்போது மத்திய அரசு வழக்கத்துக்கு மாறாக இப்படிச் செய்வது இந்தியைத் திணிக்க மத்திய அரசு மேற்கொண்டு வரும் முயற்சியை மேலும் உறுதிப்படுத்துவதாக அமைந்துள்ளது என்றும் தமிழக முதல்வர் என்னிடம் கூறினார்.



### உறுதியை மீறுவதா?

இந்தப்பிரச்சினையை மத்திய அரசில் சம்பந்தப்பட்டவர்களிடம் எடுத்துச் சொல்வேன். இந்தி திணிப்பு இல்லை என்ற மத்திய அரசின் உறுதி மொழியை இந்த நடவடிக்கை மீறுவதாகவே நான் கருதுகிறேன்.

இந்தி திணிப்பை நானும் எதிர்க்கிறேன்.

ஜனதா அரசு மேற்கொள்ளும் முற்போக்குத் திட்டங்களுக்கு தனது கட்சி ஆதரவு அளிக்கும் என்றும் முதல்வர் எம்.ஜி.ஆர். என்னிடம் கூறினார்.''

மேற்கண்டவாறு டாக்டர் சுப்பிரமணியம்சாமி கூறினார்.

ஜனதாவில் சமரசம்

—2ம் பக்கம்

### மதுரையில் அமைச்சர்

## சவுந்தரராசன் வீதிவீதியாகச் சென்று ஓட்டு கேட்டார்

மதுரை, ஜூலை 7— மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் ஆர். சவுந்தரராசன் நேற்று மதுரையில் வீதி வீதியாகச் சென்று மக்களைச் சந்திந்து ஓட்டுக் கேட்டார்.

54வது வட்டத்திலும் 46வது வட்டத்திலும் அவர் பல இடங்களுக்குப் போனார்.

தாய்மார்கள் இரட்டை இலைக் கோலமிட்டு ஆரத்தி சுற்றி அமைச்சரை வரவேற்றனர்.

54-வது வட்டத்தில் போட்டியிடும் நவநீத கிருஷ்ணனுக்கு ஆதரவாக அமைச்சர் சவுந்தரராசன் பல இடங்களுக்குச் சென்றார்.

திருப்பரங்குன்றம்ரோடு அரிஜனக் காலனி, சுப்பிரமணியபுரம், தெற்கு சன்முகபுரம் ஆகிய இடங்களுக்குச் சென்று ஓட்டு கேட்டார்.

### இரட்டை இலைக் கோலம்

தெரு எங்கும் தாய்மார்கள் இரட்டை இலைக் கோலமிட்டு இருந்தனர்.

அமைச்சருக்கும் வேட்பாளருக்கும் தாய்மார்கள் ஆரத்தி சுற்றி வெற்றித் திலகம் இட்டனர்.

அமைச்சரின் பின்னால் ஆயிரத்துக்கு மேற்பட்ட கழகத்தோழர்கள் சென்றனர்.

கழகச் சின்னமான இரட்டை இலை பெரிய அளவில் எடுத்துச் செல்லப்பட்டது.

அமைச்சருடன் பாலகுருவாரெட்டியார், லட்சுமி நாராயணன் ஆகியோரும் சென்றனர்.

சட்டக் கல்லூரி மாணவர்கள் சன்முகசுந்தரம் தலைமையிலும் மதுரை கல்லூரி மாணவர்கள் மனோகரன் தலைமையிலும், மருத்துவக் கல்லூரி மாணவர் நந்தகுமார் தலைமையிலும் வந்தனர்.

பாலு, பாண்டி, முருகன், அக்பர் போஸ், ஆறுமுகம், தனுஷ்கோடி ஆகியோரும் வந்தனர்.

46-வது வட்டத்தில் போட்டியிடும் அக்பர் உசேனுக்கு ஆதரவு திரட்ட அமைச்சர் சவுந்தரராசன் குப்பு பிள்ளை தோப்பு, மேலவாசல், போலீஸ் லைன் ஆகிய இடங்களுக்குச் சென்றார்.

## கிருமி ஆராய்ச்சிகூடம் மூலிகைத் தோட்டம்: மதுரையில் அமைப்பு

மதுரை, ஜூலை 7— மதுரையில் நுண்ணிய கிருமி ஆராய்ச்சி கூடமும், மூலிகைத் தோட்டமும் அமைக்கப்படுகிறது. இந்த தகவலை அமைச்சர் சவுந்தரராசன் தெரிவித்தார்.

மதுரையில் நிருபர்களுக்குப் பேட்டியளித்த போது அமைச்சர் சவுந்தரராசன் கூறியதாவது:

மதுரை பல் மருத்துவமனை ஆரம்பித்து 25 வருடம் ஆகிறது இதன் வெள்ளிவிழா இம்மாதம் 23ம்தேதி மதுரையில் நடக்கிறது இந்த விழாவுக்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை தாங்குகிறார்.

மதுரை மருத்துவக்கல்லூரியில் படித்துப்பட்டம் பெற்ற மாணவர்களுக்கு புரட்சித்தலைவர் பரிசுகள் வழங்குகிறார் இந்தவிழா மதுரை மருத்துவக்கல்லூரியில் இம்மாதம் 22 ம் தேதி நடக்கிறது.

தென் மாநிலங்களில் முதல்தடவையாக மதுரையில் நுண்ணிய கிருமிகள் ஆராய்ச்சிக் கூடம் ஆரம்பிக்கப்படுகிறது. மதுரை மருத்துவ கல்லூரியில் இது விரைவில் தொடங்கும்.

சித்த மருத்துவத்தைப் பெரும் அளவு வளர்த்தாக வேண்டும் என்பது புரட்சித்தலைவரின் விருப்பம் இந்தஅரசு அதற்கான திட்டங்களைத் தீட்டி வருகிறது.

அடுத்த ஆண்டு நிறுவப்படும் 5 மூலிகைத் தோட்டங்களில்மதுரையில்ஒன்று நிறுவப்படும்.

அடுத்த ஆண்டு முதல் மருந்து பாட்டில்கள், மாத்திரை இவற்றில் தமிழ்நாடு அரசுஎன்று முத்திரையிடப்பட்டு இருக்கும். இதன்மூலம் மருந்துகள் திருட்டு போவது தடுக்கப்படும்.

கிராமப்புற மக்களுக்கு உதவும் நோக்கத்துடன் நடமாடும் மருத்துவமனைகள் ஆரம்பித்து வைக்கப்படும். தமிழ் நாடு முழுவதும் 100 நடமாடும் மருத்துவமனைகள் செயல்படும்.

வளரும் சமுதாயத்தை நோயற்ற முறையில் வளர்க்கவேண்டும் என்பது புரட்சித் தலைவரின் ஆசை. அந்த முறையில் கிராமப்புறங்களில் பள்ளிகளுக்கு மருத்துவர்கள் சென்று மாணவர்களைப் பரிசோதித்து வருகிறார்கள். விதவைபெண்களுக்குமருத்துவமனையில் இரு இடங்களை தமிழ்நாடு அரசு ஒதுக்கியுள்ளது.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் கூறினார்.

### நாளை...

விவசாயத்துறையில் புரட்சித்தலைவர் அரசின் சாதனை- உணவு உற்பத்தியில் தன்னிறைவு குறித்து 'டைம்ஸ் ஆப் இந்தியா' நாளேடு வெளியிட்ட சிறப்புக் கட்டுரை நாளை இடம் பெறும்.

## கண்ணதாசனுக்கு விருது வழங்கும் விழா



சென்னை, ஜூலை 7-அரசவைக் கவிஞர் கண்ணதாசனுக்கு விருது வழங்கும் விழா நாளை மறுநாள் (ஞாயிற்றுக்கிழமை) நடக்கிறது.

அரசவைக் கவிஞராக நியமிக்கப்பட்டுள்ள கவிஞர் கண்ணதாசனுக்கு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி விருதுவழங்குவார்.

இந்த விழா சென்னை ராஜாஜி மண்டபத்தில் 9-ந்தேதி மாலை 6 மணிக்கு நடக்கிறது.

நிதி அமைச்சர் நாஞ்சிலார், ம. பொ. சி., நீதிபதி கோகுல கிருஷ்ணன், மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் குழந்தைசாமி, கவிஞர் சுரதா, டி. வி. நாராயணசாமி ஆகியோர் பேசுகிறார்கள். அமைச்சர் அரங்கநாயகம் தலைமை வகிப்பார். கல்வித் துறை செயலாளர் ரங்கபாஷ்யம்வரவேற்றுப் பேசுவார்

"எங்கள் வாக்கு இரட்டை இலைக்கே! அண்ணாவின் இதயக்கனி புரட்சித்தலைவருக்கே மாநகராட்சித் தேர்தலில் 'வெற்றிக் கனி'யை வழங்குவோம்!" என்று முழக்கமிட்டு மதுரை மக்கள் வெற்றிவாகை சூட்ட இருக்கும்

# மதுரை மாநகராட்சித் தேர்தலில் போட்டியிடும் கழக வேட்பாளர்கள்

10. மதுரை முத்து
சாத்தமங்கலம்

1. எஸ்.திராவிடமணி
விளாங்குடி

3. கே. எம். சின்னு
செல்லூர்

6. வி. எம். ராஜாங்கம்
நரிமேடு

11. கிருஷ்ணன
தல்லாகுளம்

14. எம். எஸ். மணி
திருவாப்புடையார் கோவில்

19. எம். ஜனார்த்தனம்
பொன்னகரம்



32. முருகன்
மீனாட்சி கோவில்

55. முருகேசன்
சப்பாணிகோவில் தெரு

56. பெருமாள்
தெற்கு கிருஷ்ணன் கோவில்

57. என். எஸ். ராஜேந்திரன்
தெற்கு வாசல்

60. எஸ்.ஜே.பாலகிருஷ்ணன்
பந்தடி



62. எம் (பு) ஷியசாமி
வில்லாபுரம்

## கழகச் செய்திகள்

### வேளச்சேரி

7-7-78 வெள்ளி மாலை 6.30 மணிக்கு வேளச்சேரி சாலையில் சா. செல்வம் தலைமையில் பேசுவோர்: டாக்டர் சமரசம் எம்.எல்.ஏ., கவிஞர் முத்துராமலிங்கம், அன்புரோஸ், சைதை சா. துரைசாமி, ஆர்.எஸ்.மணி, திருவாரூர் முத்து, ஆர். வேம்புலி, கே. கோபால், சி. நாகராஜ், என். எஸ். மோகன் மற்றும் பலர்.

### புதுவண்ணை

7-7-78 வெள்ளிக்கிழமை மாலை 7 மணிக்கு சீனிவாச நகர் - தங்கம் சினிமா அரங்கு பின்புறம் டி. கோவிந்தசாமி தலைமையில் பேசுவோர்: கோடம்பாக்கம் குமார், வண்ணை மு. பாண்டியன் வண்ணை விநாயகம், வண்ணை முத்துகுமார், ஏ. எஸ், அருணசலம், சோ. கணேசன், கே. மேகவர்ணம், எஸ். பகதூர், பாலு, சி. செல்வராஜ் மற்றும் பலர்.

### கடலூர்

8-7-78 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு சுண்ணாம்புக்காரத் தெருவில் ஆர். ஞானம் தலைமையில் பேசுவோர்: அடியார், அப்துல் லத்தீப் எம். எல். ஏ., ஏ. ரகுபதி, தே. ஜனார்த்தனம் அன்புதண்டபாணி, ஜான் பாஷா, குப்புசாமி, தமிழ்வாணன், என். தங்கமணி ஏ. ராஜாமுகமது, பி. ராஜாராம், ஆர். துரைரங்கம் மற்றும் பலர்.

### திருவில்லிபுத்தூர்

8-7-78 சனி மாலை 7 மணிக்கு ஆத்துக்கடைத் தெரு அண்ணா திடலில் எம். மாரியப்பன் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் எஸ்.டி எஸ்., முத்தையா எம். எல். ஏ., தாமரைக்கனிஎம்.எல்.ஏ., சந்திரன், வீரபத்திரன், சுந்தரம், ராமதாஸ், மாரிமுத்து ஆறுமுகம் மற்றும் பலர்.

### விருதுநகர்

9-7-78 ஞாயிறு இரவு 7 மணிக்கு அம்மன் கோவில் திடலில் எம். யாகப்பன் தலைமையில் பேசுவோர்: இராம. அரங்கண்ணல், கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன்எம்.எல்.ஏ, எம். சுந்தரராசன்எம்.எல்.ஏ., பி. மருதையா, கண்ணப்பன், விருதை ஜெயராஜ், ஐ. மருது, எஸ். பரமசிவம் எஸ். அப்பாவு சுப்பிரமணி, மு. எகியா, வி. ஏ. துரை, பெஸ்ட் ஜெயராஜ், அ. பொன்னுசாமி, ஜி. தியாகராசன், எம்.ஜி. பழனிக்குமார் மற்றும்பலர்

### திண்டுக்கல்

8-7-78 சனிக்கிழமை மாலை 6-30 மணிககு பி. ஆர். சி. பணிமனை முன்பு பி. ஆர். சி. அண்ணா தொழிலாளர் சங்கத்தின் சார்பாக சங்க அலுவலக திறப்பு விழா - கழகப் பொதுக்கூட்டம். தலைமை எம். கமால் பாட்சா பேசுவோர்: பா. வளர்மதி, பாலகுரு எம். எல்.ஏ., என்.எஸ்.வேலு. வா. சிவநாத்பாபு, கே. கனகராஜ், பி. சமதர்மம், பி. தியாகராசன், வி. தங்கவேலு, ஏ. பாலகிருஷ்ணன், கே. ஆர். வாசுதேவன், எம். பாண்டி, எஸ். கண்ணன், பி. எஸ். இளங்கோவன் மற்றும் பலர்.

### திருவதிகை

9-7-78 ஞாயிறு மாலை 6 மணிக்கு வீரட்டானேசுவரர் வீதி அண்ணா திடலில் பி. கணேசன் தலைமையில் பேசுவோர்: அடியார், ஆர். லட்சுமிகாந்தன், சீனு, ஜெயராமன், அ. ப சிவராமன், வி. ராசதுரை, தங்க புஷ்பராசன், கோ. லட்சுமி நாராயணன், எஸ். ஏ. சக்கரபாணி, ஜி. பிச்சை, என். வீரப்பன், எஸ். காசிலிங்கம், ஆர். பழனி, ஆர். ஏ. கமால் மற்றும் பலர்.

### மாயூரம்

9-7-78 ஞாயிறு மாலை 6 மணிக்கு நகரப் பூங்காவில் புலவர் மதிவாணன் தலைமையில் பேசுவோர்: கோடம்பாக்கம் குமார், தம்பி பாலவேலாயுதம், ராமகிருஷ்ணன், அச்சுதன், கந்தபெருமாள், ராமதாஸ், அன்பு கண்ணன் மற்றும் பலர்.

### திருப்பூர்

9-7-78 ஞாயிறு மாலை 7 மணிக்கு நகராட்சி அலுவலகம் அருகில் எம். மாரப்பன் தலைமையில் பேசுவோர்: தஞ்சை என்.எஸ் இளங்கோ, கே. ஏ. ராஜு எம். பி., இரா. மணிமாறன் எம்.எல்.ஏ, இரா. சுப்பிரமணியம், முகவை கண்ணன், எம். என். பழனிசாமி, நா. கந்தசாமி எஸ். கேசவன், அய்யப்பன், வே. பழனிசாமி, கே. எம். சுப்பிரமணியம், பி. பெருமாள் சாமி, கே. இ. எஸ். லோகநாதன் மற்றும் பலர்.

### முகவரி

கவிஞர் முத்துராமலிங்கம்
023, சட்டமன்ற
உறுப்பினர் விடுதி,
சென்னை-600002.

46. அப்சா உசேன
காஜியார் தோப்பு

## 'பாப்பாத்தி' பட டைரக்டரின் பரபரப்பான பேட்டி

'பாப்பாத்தி'- பிராமண சமூகத்திற்கு எதிரான கதையமைப்பைக்கொண்ட படமா?

டைரக்டர்
ஆர். கே. சண்முகத்தின்
பரபரப்பான பேட்டி
9-7-78
'அண்ணா' இதழில்
இடம் பெறும்





## திருமண நன்றி அறிவிப்பு

எங்களது மகள் தேன்மொழிக்கும், எம்.ராமதாசுக்கும் நடந்த திருமணத்துக்கு தலைமையேற்று சிறப்புற நடத்தித் தந்த தமிழகத்தின் நம்பிக்கை நட்சத்திரமும் எங்கள் குடும்ப விளக்குமான முதல்வர் புரட்சித் தலைவருக்கும், திருமணத்தில் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்திய அமைச்சர்பெருமக்கள், அனைத்துக் கட்சித் தலைவர்கள் மற்றும் அனைவருக்கும் எம் இதயங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மற்றும் வாழ்த்து அனுப்பிய ஜனாதிபதி, துணை ஜனாதிபதி, பிரதமர், தமிழ்நாடு ஆளுநர், அமைச்சர் பெருமக்கள், மேலவைத்தலைவர், துணைத்தலைவர், சர்வ கட்சித் தலைவர்கள், கழக அடலேறுகள் உட்பட அனைவருக்கும் நெஞ்சார்ந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறோம்.

ரத்தின. பாலகுருசாமி எம்.எல்.சி.,
திருமதி வைரம் பாலகுருசாமி

தேசாயை எதிர்க்கும் பேரணி திடீர் வாபஸ்

# மோதலில் திருப்பம்: தேசாய் - சரண்சிங் விரைவில் சந்திப்பு

புதுடெல்லி, ஜூலை 7- தேசாயை எதிர்க்கும் பேரணியை சரண்சிங் கோஷ்டியினர் கைவிட்டனர். விரைவில் தேசாயும் சரண்சிங்கும் சந்தித்துப் பேசுகிறார்கள். இந்த தகவலை ஜனதா தலைவர் சந்திரசேகர் தெரிவித்தார்.

நேற்று நள்ளிரவில் நிருபர்களுக்கு ஜனதா தலைவர் சந்திரசேகர் பேட்டியளித்தார். அப்போது அவர் கூறியதாவது:

"தேசாய் கோஷ்டிக்கும், சரண்சிங் கோஷ்டிக்கும் இடையே சமரசம் ஏற்பட்டது. இருவரும் விரைவில் சந்தித்துப் பேசுகிறார்கள். இந்த சந்திப்பு எப்போது நடைபெறும்என்று சொல்லமுடியாது.

ஆனால் விரைவில் தேசாயும் சரண்சிங்கும் சந்திப்பார்கள். தேசாயும் சரண்சிங்கை சந்திக்க விரும்புகிறார். சரண்சிங்கும் தேசாயை சந்திக்க விரும்புகிறார்.

கட்சியில் ஏற்பட்ட மோதல்களைத் தீர்க்க இரு தரப்பு தலைவர்களும் விவாதிப்பார்கள். ஒட்டுமொத்தமான ஒப்பந்தம் ஏற்படும். ஆலோசனைகளும் அறிவுரைகளும் எல்லா தரப்பில் இருந்தும் வரவேற்கப்படுகின்றன.

இனி ஜனதா தலைவர்கள் பொதுமேடைகளிலும் பத்திரிகைகளிலும் ஒருவரை ஒருவர் தாக்கும் விதத்தில் எழுதவோ பேசவோ மாட்டார்கள்.

### தேசாயின் விருப்பம்

அரசாங்கமாறுதல்களைப் பொறுத்த வரையில் அது முழுக்க முழுக்க தேசாயின் விருப்பத்தைப் பொறுத்தது. இது விஷயம் குறித்து எவ்வித ஆலோசனைகளும் இதுவரை விவாதிக்கப்படவில்லை.

நாடாளுமன்ற ஜனதா கட்சி துணைத் தலைவர் பதவியிலிருந்து எஸ். என். மிஸ்ரா ராஜினாமா செய்திருக்கிறார். ஆனால் இது என்னைப் பொறுத்த விஷயம் அல்ல. நாடாளுமன்ற ஜனதா கட்சியைப் பொறுத்ததாகும்.

பல்வேறு தரப்பட்ட சமரச முயற்சியின் காரணமாகவும் ஜனதா தலைவர்கள் மேற்கொண்ட தீவிர முயற்சியின் காரணமாகவும் இந்த சமரசம் ஏற்பட்டுள்ளது.

மத்திய அமைச்சர்கள் ஜார்ஜ்பெர்னாண்டஸ், பிஜு பட்நாயக் ஆகியோர் நேற்று தொலைபேசியில் தேசாயுடன் தொடர்பு கொண்டு இந்த சமரச முயற்சியின் இறுதி அமைப்பை உருவாக்கினார்கள்.

அரியானா முதல்வர் தேவிலால் ராஜினாமா செய்ய வேண்டியதில்லை. புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்க இன்று (வெள்ளிக்கிழமை) நடக்கவிருந்த அரியானா சட்டமன்ற உறுப்பினர் கூட்டம் ரத்து செய்யப்பட்டது."

இவ்வாறு சந்திரசேகர் கூறினார்.

## பண மோசடி: ஓட்டல் அதிபர் மீது வழக்கு

சென்னை, ஜூலை 7- ஐதராபாத்தைச் சேர்ந்த ஒருவரிடம் ரூ. 30 ஆயிரம் மோசடி செய்ததாக சென்னை கீதாகுருப்ஓட்டல் அதிபர் ஜெயராமன் மீது சென்னை குற்றபிரிவுப்போலீசார் வழக்கு தொடர்ந்துள்ளனர். ஐதராபாத்தைச் சேர்ந்த கோபாலகிருஷ்ணனிடம் ரூ 30 ஆயிரம் வாங்கிக் கொண்டு ஜெயராமன் மோசடி செய்ததாகத் தெரிகிறது.

## புதுவையில் பஞ்சாயத்து தேர்தல்

பாண்டிச்சேரி, ஜூலை 7- அரசு அறிவித்ததும்பஞ்சாயத்து தேர்தலை நடக்க தயாராக இருக்கிறோம் என்று புதுவை மாநில உள்ளாட்சித் துறை செயலாளர் பல்பீரசிங் தெரிவித்தார். வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்பட்டு விட்டது. புதுவை மாநிலத்தில் 4 நகரசபைகளும், 11 கொம்யூன் பஞ்சாயத்துக்களும் உள்ளன. மொத்தம் 16 ஆயிரத்து 200 வாக்காளர்கள் உள்ளனர்.

## சமரச ஏற்பாடு: தேவிலால் வரவேற்பு

சண்டிகார், ஜூலை 7- ஜனதாக் கட்சியில் ஒற்றுமையை வளர்ப்பதற்காக மேலிடத்தலைவர்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சியை சரண்சிங் கோஷ்டியைச் சேர்ந்த அரியானா முதல்வர் தேவிலால் வரவேற்றார்.

அனைவரும் இணைந்து மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றுவோம் என்று ஒரு அறிக்கையில் அவர் குறிப்பிட்டுள்ளார்.

அரியானா சட்டசபை ஜூலை 26ந் தேதி கூடுகிறது.



33. நாகூர் பிச்சை
சாமிசந்நிதி



34. முகமது தாஜுதீன்
கரீம்பாஷா பள்ளிவாசல்

38. மு கிருஷ்ணன்
அனுப்பானடி

42. கே.ஜே சங்கரநாராயணன்
லட்சுமிபுரம்

45. கே. எஸ் சந்தானம்
பெருமாள் தெப்பகுளம்

# மேட்டூர் அணை திறப்பு: புரட்சித்தலைவர் அரசுக்கு விவசாயிகள் நன்றி

### துரை. கோவிந்தராசன் அறிக்கை

தஞ்சாவூர், ஜூலை 7- விவசாயத்துக்கு குறிப்பிட்ட நேரத்தில் தண்ணீர் கிடைக்க மேட்டூர் அணையைத் திறந்து விடும் புரட்சித் தலைவர் அரசுக்கு விவசாயிகள் சாரபில் அரசு கொறடா துரை. கோவிந்தராசன் நன்றி தெரிவித்தார்.

அரசு கொறடா துரை கோவிந்தராசன் விடுத்துள்ள அறிக்கைவருமாறு:

கடந்த ஆண்டு புயலாலும், வெள்ளத்தாலும் பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு இந்தஆண்டு மேட்டூர் அணையில் தண்ணீர் நிரம்பி வருவதும், குறிப்பிட்ட காலத்தில் தண்ணீர் திறந்து விடப்பட்டதும் விவசாயிகள் உற்பத்தியை பெருக்கிக் கொள்வதற்கு வகை செய்துள்ளது.

தொழிலாளர்கள் வேலை இல்லாமையைப் போக்கிக் கொள்வதற்கும் பயன்படுகிற வகையில் இந்த அரசு மேற்கொண்ட நடவடிக்கையை விவசாயிகள் பாராட்டுகிறார்கள்.

இந்த ஆண்டு விவசாயிகள் இருபோக சாகுபடி செய்வதற்கு ஏற்ற தருணத்தில் தண்ணீர் திறந்து விடப்பட்டிருக்கிறது என்பதை எண்ணி புரட்சித் தலைவர் அரசுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்

இவ்வாறு அந்த அறிக்கையில் துரை. கோவிந்தராசன் கூறியுள்ளார்.

# சரண்சிங் குடும்பத்தினர் ஊழல்கள்

## மொரார்ஜி தேசாய் கூறும் எதிர் புகார்கள்

புதுடெல்லி, ஜூலை 7- மொரார்ஜி தேசாய் மகன் மீது சரண்சிங் ஊழல் புகார் கூறி இருந்தார் அல்லவா? அதற்கு மொரார்ஜிதேசாய் பதிலளிக்கையில் சரண்சிங் குடும்பத்தினர் ஊழல் செய்ததாகவும் புகார்கள் வந்துள்ளன என்று குறிப்பிட்டுள்ளார்.

மொரார்ஜி தேசாய் மகன் காந்தி தேசாய் மீது கூறப்படும் ஊழல் புகார குறித்து விசாரணை நடத்த வேண்டும் என்று சரண்சிங் கூறி இருந்தார்.

இது தொடர்பாக மொரார்ஜிதேசாயும் சரண்சிங்கும்கடிதப் பரிமாறங்கள் செய்து கொண்டனர்.

அந்தக் கடித விவரங்களை மொரார்ஜி தேசாய் விரைவில் வெளியிட முடிவு செய்துள்ளார்,

பிரதமர் மகன் மீதான ஊழல் புகாரைப் பற்றி உள்துறை இலாகா விசாரணை நடத்த முடியாது. புகாரில் ஆதாரம்உள்ளதா என்று அறிய பிரதமரே விசாரணைக்கு உத்தர விட வேண்டும் என்று சரண்சிங் பிரதமருக்கு அனுப்பியஒரு கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

குற்றம் புரிந்ததாக போதிய ஆதாரம் சாட்சியம் ஏதும்கூறப்படவில்லை. வெறும் புகார் தான் வந்துள்ளது. இதை வைத்து விசாரணைக்கு உத்தரவிட முடியாது என்றுபிரதமர் மொரார்ஜி தேசாய் சரண்சிங்குக்கு பதிலனுப்பினார்.

சரண்சிங் குடும்பத்தினர் மீதும் இது போன்ற சில ஊழல் புகார்கள் வந்துள்ளன. என்றாலும் நான் அதைப்பொருட்படுத்தவில்லை என்றும் பிரதமர் தமது பதிலில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆதாரம் இல்லாதபுகார்கள் மீது விசாரணை நடத்தி எந்தப் பயனும் இல்லை என்று பிரதமர் கூறியுள்ளார்.

ஆனால் சரண்சிங்கோ ''பிரதமர் மகன் மீதான ஊழல் புகாருடன் எனது குடும்பத்தினர் மீது கூறப்பட்டுள்ள ஊழல் புகார்களையும் சேர்த்து விசாரணை நடத்துங்கள். இவ்வாறு விசாரணை நடத்தி, அதில் ஆதாரம் இல்லை என்று அறிவிக்கப்பட்டால் ஜனதா அரசின் புகழ் அதிகரிக்கும்'' என்றுசரண்சிங் கூறி இருக்கிறார்.

விசாரணைக்கு உத்தரவிட்டால் புகார்கள் கூறுவதற்கு முடிவே இருக்காது. குற்றச்சாட்டுக்கள் வந்து கொண்டே இருக்கும். விசாரணைக்கு உத்தரவிடுவது ஒன்றே அரசின் வேலையாகி விடும் என்றும் பிரதமர்குறிப்பிட்டுள்ளார்.

லஞ்ச ஊழலை எதிர்த்து போர்நடத்துகிறோம்என்று கூறிக் கொண்டு சி. பி. ஐ. யிடம் அதிகாரத்தைக் கொடுத்து சிலர் மீது பழி வாங்கும் நடவடிக்கை எடுத்தால் முந்திய அரசு செய்த தவறுகளை திருப்பிச் செய்ததும்போலாகி விடும் என்றும் மொரார்ஜி தேசாய் கூறியுள்ளார்.

---

கழக அரசின் ஓராண்டு சாதனை

## 21 ஆயிரம் அரிசன மக்களுக்கு வீட்டுமனை

புகுமுக வகுப்பிற்கு மேல் படிக்கும் அரிசன ஆதிவாசிகள் மாணவ-மாணவியர்களுக்கும் அவர்களது பெற்றோர் பாதுகாவலரின் வருமானம் ரூ 2,500க்கு மேற்படாமல் இருந்தால் மட்டுமே 1976-77ம் ஆண்டு முடிவுவரை கல்லூரிப்படிப்புக்கட்டணம் சலுகை அளிக்கப்பட்டு வந்தது. இந்த வருமான வரம்பை நீக்கி எல்லா அரிசன ஆதிவாசிகள் மாணவ-மாணவியர்களுக்கும் அவர்கள்பெற்றோர் பாதுகாவலரின் வருமானத்தைப் பாராமல் கல்லூரிப் படிப்புக் கட்டணச் சலுகை 1977-78ம் ஆண்டிலிருந்து அளிக்கப்பட்டுவருகிறது. இதனால் இம்மாணவர்கள் எல்லா நிலைகளிலும் இலவசக் கல்வி பெறுகிறார்கள்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீட்டுமனை வழங்கும் திட்டம் 1949 முதல் அமுலில் உள்ளது. 1949 முதல் 1977 வரை 28 ஆண்டுகளில் இத்திட்டத்தின் கீழ் ஐந்து கோடியே பதினறு லட்சம் ரூபாய் செலவில் 16,824 ஏக்கர் நிலம்கையகப்படுத்தப்பட்டு 2,62,693 மனைகள் வழங்கப்பட்டுள்ளன.

1977-78-ல் இதற்கென ரூ 1கோடி ஒதுக்கப்பட்டு 1283 ஏக்கர் நிலம் கையகப்படுத்தப்பட்டு20,799 மனைகள் வழங்கப்பட்டுள்ளன.

இதேபோல் 1978-79க்கும் ஒரு கோடி ரூபாய்இத்திட்டத்திற்கென ஒதுக்கப்பட்டுள்ளது.

ஏழை அரிசனங்களில் எவரேனும் இறந்து விட்டால் அவரது ஈமக் கடன்களைச்செய்ய ரூ50 நிதிஉதவி உடனே அளிக்கப்படும்

தொழிற்பயிற்சி நிலையங்களில் படிக்கக்கூடிய மாணவர்களுக்கு வழங்கும் மானியம் மாதம் ஒன்றுக்கு ரூ 60 லிருந்து ரூ 82-50 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது

1977-78 ஆம் ஆண்டில் ஐம்பது குழந்தைகள் காப்பகங்கள் ஆரம்பிக்கப்பட்டன. 1978-79ல் ஐம்பது குழந்தைகள் காப்பகங்கள் திறக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

---

## பெரியார் போக்குவரத்து தோழர்களுக்கு

தந்தைபெரியார்போக்குவரத்து அண்ணா தொழிலாளர் சங்கத் தோழர்களை போக்குவரத்து அண்ணா தொழிற்சங்க கூட்டமைப்புச் செயலாளர் கோ. பா. அமிர்தலிங்கம் ஒவ்வொரு பணிமனையிலும் நேரில் சந்திக்க இருக்கிறார். சங்க வளர்ச்சிகுறித்தும்எதிர்கால ஆக்கப்பணி குறித்தும் விவாதித்து முடிவெடுக்க கீழ்க்கண்ட தேதிகளில் அவர் சுற்றுப்பயணம் மேற்கொள்வதால் ஆங்காங்கே உள்ள அண்ணா தொழிலாளர் சங்கத்தோழர்கள் ஆலோசனைக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

ஜூலை12,13ஆகிய தேதிகளில் வடஆற்காடு மாவட்டத்திலுள்ள அனைத்துப் பணிமனைகளிலும், ஜூலை 14, 15 ஆகிய தேதிகளில் தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள அனைத்துப் பணிமனைகளிலும் அண்ணா தொழிற்சங்கத் தோழர்களை சந்தித்துப் பேசுகிறார்.

இவ்வாறுபோக்குவரத்து அண்ணா தொழிற்சங்க கூட்டமைப்பு செயலாளர் கோ. பா. அமிர்தலிங்கம் தெரிவித்துள்ளார்:

---



---



---

நவீன அரிச்சந்திரன் கருணாநிதி;

## துச்சாதனன் தி. மு. க: உள்ளாட்சி அமைச்சர் காளிமுத்து கிண்டல்

மதுரை, ஜூலை 7- எப்படி துச்சாதனனிடம் சேலை வாங்கிக் கொடுக்கும் பொறுப்பை ஒப்படைக்கக் கூடாதோ அதுபோல மதுரை மாநகராட்சியையும் தி. மு. கழகத்திடம் ஒப்படைக்கக் கூடாது என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்.

கோட்டையில் கோப்புகள் குவிந்து கிடப்பதாகச் சொல்கிறார் நவீன அரிச்சந்திரன் கருணாநிதி. கோப்புகள் நகராமல் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டு, எப்படி செயல்பட முடியும் என்றும் அமைச்சர் காளிமுத்து கேட்டார்.

மதுரையில் அமைச்சர் காளிமுத்து பேசும்போது கூறியதாவது:

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் அரும்புவிட்ட காலத்திலேயே முதல் களமாக திண்டுக்கல்லை சந்தித்தது. அதில் எப்படி வெற்றிபெற முடியும்என்று கேட்டார்கள்.

ஆனால் நம்முடைய கழகத்தைப் புரிந்துகொண்டு நமது வெற்றிக்கு இரு கம்யூனிஸ்ட் கட்சியினரும் தோள் கொடுத்தனர்.

### அகில இந்திய அங்கீகாரம்

திண்டுக்கல் தேர்தல் மூலம் நாம் அரசியல் கட்சி என்ற அகில இந்திய அங்கீகாரத்தைப் பெற்றோம்.

அந்த வெற்றிக்கு சாணை வைக்கிற தோதலாக இந்த மாநகராட்சி தோதல் வந்திருக்கிறது. (கைதட்டல்)

நம்முடைய கழகத்தின் சார்பில் போட்டியிட தகுதி உடையவர்கள் பலர் இருக்கிறார்கள்.

ஆனால் கழகத் தலைமை ஒருஇடத்திற்கு ஒருவரைத்தான் நிறுத்த முடியும். கழகத்தொண்டர்கள்கட்சி நலன் கருதி மனமாச்சரியங்களை ஒதுக்கி செயல்படவேண்டும்.

கருணாநிதியைப்பொறுத்தவரை பணபலத்தைநம்பி இருக்கிறார். கடைசி நேரத்தில் தோல்வி ஆத்திரத்தில் எதையும் செய்வார.

நாம் வாக்காளர்களை அமைதியாக வாக்குகளைக் கேட்கவேண்டும். வாக்குசாவடிகளுக்கு அழைத்து வரவேண்டும்.

நம்முடைய தலைவரை தரக்குறைவாக அவர்கள் பேசுகிறார்கள், அவமதிக்கிறார்கள் என்பதால்நாமும் அந்த நிலைக்கு இறங்கக் கூடாது. தோதல் முடியும் வரை உற்சாகம் குன்றக் கூடாது.

நமது கூட்டணியில் பிணக்கைஉருவாக்க திமுகவினர் முயற்சி செய்வார்கள். இந்தபூசுத்தும்கலையை கருணாநிதி செய்வார்.

அதை மோதி முறியடிக்க நம்மால் முடியும். (கைதட்டல்)

### கலைத்தது சரியா?

எந்தக் காரணமும் சொல்லாமல் முறையாக நடந்துவந்த மதுரை மாநகராட்சியை மூத்தண்ணன் மீது இருந்த தனிப்பட்ட கோபத்தால் கலைத்து மிகுந்த அவதிக்குள்ளாக்கியது தி. மு. க. ஆட்சி.

அப்படிச் செய்தவர்கள் இங்கே ஒட்டுக்கேட்க வருகிறார்கள்.

### சவாலை வீழ்த்தினோம்

பேரறிஞர் அண்ணா ஒரு முறை ஒருஉதாரணத்தைச் சொன்னார்.

சேலை வாங்கிக் கொடுக்கும் பொறுப்பை துச்சாதனனிடம் ஒப்படைக்கலாமா என்று கேட்டார்.

எப்படி துச்சாதனனிடம் சேலை வாங்கிக் கொடுக்கும் பொறுப்பை ஒப்படைக்கக் கூடாதோ அதுபோல இந்த மாநகராட்சியை தி.மு.க.-விடம் ஒப்படைக்கக் கூடாது.

(பலத்த கைதட்டல்)

கழக ஆட்சி ஏற்பட்ட பிறகு அடுக்கு அடுக்காகப் போராட்டங்கள் நடந்தன.

புரட்சித் தலைவர் ஆட்சிப்பொறுப்பை ஏற்க முடியுமா? கோப்புக்களை பார்க்க முடியுமா என்று கேட்டார்கள். அவர்களைமுறியடித்து

(4-ம் பக்கம் பார்க்க)

---

## ரூ. 5 கோடி செலவில் பயறு வகை ஆராய்ச்சி நிலையம்

அமைச்சர் குழந்தைவேலு தகவல்

திருச்சி, ஜூலை 7— தமிழகத்தில் ரூபாய் ஐந்து கோடி செலவில் பயறு வகை ஆராய்ச்சி நிலையம் அமைக்கப்படும் என்று வேளாண்மைத் துறை அமைச்சர் குழந்தைவேலு அறிவித்தார்.

திருச்சி மாவட்டம் லால்குடியில் வேளாண்மைத்துறையினரும் 'ஸ்பிக்' நிறுவனத்தினரும் கூட்டாகச் சேர்ந்து நடத்திய குறுவைப் பெருவிழாவில் புரட்சித் தலைவா அரசு கடந்த ஓராண்டு காலத்தில் உழவர் பெருமக்களுக்காக செய்துள்ள நன்மைகளை அமைச்சர் குழந்தைவேலு எடுத்துக் கூறினார்.

திருச்சி மாவட்ட உழவர் விவாதக் குழு அமைப்பாளர்களும், உறுப்பினர்களும் கலந்து கொண்ட இவ்விழாவில் அமைச்சர், பல உழவர்களுக்கு மருந்து தூவும கருவிகளை வழங்கினார். டை-அமோனியம்பாஸ்பேட் உரத்தையும் வழங்கினார்.

இப்பள்ளியின் பெற்றோர் ஆசிரியர் சங்கத் தலைவர் அப்பாவுப்பிள்ளை சங்கத்தின் சார்பில் பள்ளிவளர்ச்சிக்காக ரூ. 13,200க்குரிய காசோலையை அமைச்சரிடம் அளித்தார்.

தஞ்சாவூர் மருத்துவக் கல்லூரி சாலையில் புதிதாக கட்டப்பட்டுள்ள தஞ்சாவூர் மாவட்ட வேளாண்மைப் பொறியியல் மற்றும் பணிக் கூட்டுறவுச் சங்கத்தின்புதியகட்டிடத்தையும் அமைச்சர் திறந்துவைத்து பணிக் கூட்டுறவுச் சங்கம் ஆற்றவேண்டிய பணிகளையும் எடுத்துக் கூறினார்.

அவர் மேலும் பேசுகையில் கூறியதாவது:

''தமிழ் நாட்டில் பயறு வகை ஆராய்ச்சி நிலையம் அடுத்த ஆண்டு அமைக்கப்படும். ரூ. 5கோடி செலவில் இந்த ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தப்படும், இதை அமைக்க மத்திய அரசு அனுமதிவழங்கிஉள்ளது

''நடப்பு ஆண்டில் தமிழ்நாட்டில் புதிதாக 200 ஏரிகள்வெட்டப்படும். 10 ஏரிகள் ஆழப்படுத்தப்படும். இதற்காக நாலே முக்கால் கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டு உள்ளது.

500 ஏக்கர் பாசனம் கொண்ட 500 குளங்களை ஆழப்படுத்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு இருக்கிறது. இதற்காக உலக வங்கியிடம் ரூ. 111கோடி உதவி கேட்கப்பட்டு இருக்கிறது.

தமிழ்நாட்டில் புதிதாக எருமை இன ஆராய்ச்சி நிலையம் ஒன்றும் விரைவில் அமைக்கப்பட இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்,

அதன்பின் தஞ்சாவூர் மாவட்டத்தில் நடைபெற்றுவரும் முக்கிய திட்டங்களைப்பற்றி ஆட்சித் தலைவரையும் மற்றும்உயர் அதிகாரிகளையும் கலந்தாலோசித்தார். வேளாண்மைத் துறை அலுவலர்களும் நீர்ப்பாசனத்துறை அலுவலர்களும் கூட்டாகச் சேர்ந்து எந்த விதப் பிரச்சினைக்கும் இடம் தராமல் உழவர்களுக்கு உதவிசெய்யவேண்டும்'' என்றுவேண்டுகோள் விடுத்தார்.

---

## முசிறிப்புத்தன் தம்பி மரணம்

முசிறி, ஜூலை 7- வருவாய்த்துறை அமைச்சரின் பார்லிமெண்டரி செயலாளர் முசிறிப்புத்தனின்தம்பி முசிறி மாறன் நேற்று மரணமடைந்தார். அவருக்கு வயது 40.

முசிறி மாறனின் சொந்தப் பெயர் சீதாராமன்.

நேற்று பிற்பகல் 4 மணி வரை உற்சாகமாக வேலை செய்து கொண்டிருந்தார். 4-15 மணி அளவில் அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. அவசரமாக முசிறி பெரிய ஆஸ்பத்திரிக்கு கொண்டு சென்றனர். முதல் உதவி சிகிச்சை அளிக்கப்பட்டது

பின்னர் திருச்சி பெரிய ஆஸ்பத்திரிக்கு கொண்டு செல்லும் வழியில் அவர் உயிர் பிரிந்தது.

தகவல் கிடைத்ததும் முசிறிப்புத்தன் முசிறிக்கு விரைந்தார். முசிறி மாறனின் மனைவி பெயர் மணி. 4 மகன்களும் 2 மகள்களும் இருக்கிறார்கள்.

திராவிட கழகத்திலும் பெரியாரிடமும் தீவிரமான பற்றுக் கொண்டவர். திராவிட கழக போராட்டங்களில் கலந்துகொண்டு பலஆண்டு சிறை தண்டனை அனுபவித்தவர்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 156, அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்திஅச்சகம், கச்சேரிசாலை, சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

# அண்ணா




# அரிசன ஆதிவாசிகள் நலத்துறை

## தமிழ் நாடு.

### படிப்பு உதவித் தொகை மற்றும் இதர சலுகைகள் வழங்குதல் பற்றிய

# அறிவிப்பு

பள்ளிப்படிப்பு மற்றும் அதற்கு மேலும் பயிலும் தமிழ்நாட்டைச் சார்ந்த அரிசன ஆதிவாசி (மதம் மாறியவர்கள் உட்பட) மாணவ - மாணவியர்களுக்கு நடப்புக் கல்வியாண்டிலும் (1978-79) வழக்கம்போல் தமிழ்நாடு அரிசன ஆதிவாசிகள் நலத்துறையினரால் படிப்பு உதவித்தொகை வழங்கப்படும்.

பள்ளிகளில் படிக்கும் அரிசன ஆதிவாசி (மதம் மாறியவர்கள் உட்பட) மாணவ- மாணவியர்களுக்கு படிப்பு உதவித்தொகை.

நடப்புக் கல்வியாண்டில் (1978-79) நான்கு முதல் பத்தாம் வகுப்பு வரை பயிலும் தகுதி வாய்ந்த எல்லா அரிசன ஆதிவாசி (மதம் மாறியவர்கள் உட்பட) மாணவ - மாணவியர்ளுக்கு அவர்களது பெற்றோர் - பாதுகாவலர் ஆண்டு வருமானத்தினை பாராமல் இலவசமாக எல்லா புத்தகங்களும் வழங்கப்படுகின்றன. இதற்கென அவர்கள் படிப்பு உதவுத்தொகை மனு அனுப்பத் தேவையில்லை. உயர்நிலைப்பள்ளிகளில் பயிலும் மாணவ - மாணவியர்கள் பள்ளிகளுக்குச் செலுத்த வேண்டிய சிறப்புக்கட்டணத்தை மாவட்ட அரிசன நல அலுவலர்கள் பள்ளிகளுக்கு செலுத்திவிடுவர். அதேபோன்று பத்தாம் வகுப்பில் பயிலும் மாணவ - மாணவியர்களால் செலுத்தப்பட வேண்டிய தேர்வுக்கட்டணம் அரசு தேர்வு இயக்குநருக்கு அரிசன ஆதிவாசிகள் நலத்துறை இயக்குநரால் செலுத்தப்பட்டுவிடும்.

கல்வி நிலையங்களுடன் இணைக்கப்பட்டுள்ள விடுதிகளில் தங்கி, ஆறு முதல் பத்தாம் வகுப்பு வரை பயிலும் மாணவ- மாணவியர்கள் மாநில அரசு உண்டுறை உதவித் தொகை விண்ணப்பங்களை பூர்த்தி செய்து சம்பந்தப்பட்ட மாவட்டஅரிசன நல அலுவலருக்கு 1-8-78க்கு முன் அனுப்பி வைக்க வேண்டும்.

ஆறுமுதல் எட்டாம் வகுப்பு வரையில் பயிலும் மாணவ- மாணவியர்களுக்கு உண்டுறை புத்தகம், சிறப்புக் கட்டணம் இவைகளுக்காக வருடம் ஒன்றுக்கு மாணவிக்கு ரூ. 175 வீதமும், மாணவருக்கு ரூ. 150 வீதமும், ஒன்பது மற்றும் பத்தாம் வகுப்புகளில் பயிலும் மாணவிகளுக்கு வருடம் ஒன்றுக்கு ரூ. 250 வீதமும் மாணவருக்கு ரூ. 200 வீதமும் உணவுக் கட்டணமாக வழங்கப்படும்.

### மத்திய அரசு உதவித் தொகை

இந்து அரிசனங்கள், புத்த மதத்தினை தழுவிய அரிசனங்கள், ஆதிவாசிகள் (எம் மதத்தினராயினும் சரி) ஆகியோருக்கு மட்டுமே மத்திய அரசு படிப்பு உதவித் தொகை வழங்கப்படும். ஒரு குடும்பத்தில் பெற்றோர்- பாதுகாவலரின் இரு குழந்தைகள் மட்டுமே மத்திய அரசு உதவித் தொகையினை எப்போதும் பெறுவதற்கு தகுதி வாய்ந்தவர்கள்.

மத்திய அரசு படிப்பு உதவித் தொகை பெறுவதற்கான ஆண்டு வருமானம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| (அ) பெற்றோர் பாதுகாவலரின் மொத்தவருமானம் மாதம் ஒன்றுக்கு ரூ. 500-க்கு மேற்படாமல் இருந்தால் | உண்டி, உறையுள் தொகை முழுமையும் மற்றும் கட்டாயமாக செலுத்தப்பட வேண்டிய கட்டணங்கள்முழுமையும் கொடுக்கப்படும். |
| (ஆ) பெற்றோர்-பாதுகாவலரின் மொத்த வருமானம்மாதம் ஒன்றுக்கு ரூ. 500க்கு மேற்பட்டு ஆனால் ரூ. 750க்குள்ளாக இருந்தால் | |
| I) பொறியியல், தொழில் நுட்பம், கட்டிடக்கலை மருத்துவம், விவசாயம், கால்நடை ஆகியவற்றில் பட்டப் படிப்பு மற்றும் மேல் பட்டப் படிப்பு. | உண்டுறையுள்கட்டணம்முழுவதுமாகவும் மற்றும்கட்டாயமாகசெலுத்தப்படவேண்டிய கட்டணங்கள் முழுமையும் கொடுக்கப்படும், |
| II) மற்ற படிப்புகள் | உண்டி, உறையுள் கட்டணம் பாதியும், மற்றும்கண்டிப்பாக செலுத்தப்படவேண்டிய கட்டணங்கள் முழுமையும் கொடுக்கப்படும். |
| (இ) பெற்றோர் பாதுகாவலரின் மொத்தவருமானம் மாதம் ஒன்றுக்கு ரூ. 750-க்கு மேற்பட்டு இருக்குமானல் | படிப்பு உதவித் தொகை கிடையாது. |
| (ஈ) முழு நேர பணியில் இருக்கும் மாணவர்களுக்கு | படிப்பு உதவித் தொகை கிடையாது. |

மத்திய அரசு படிப்பு உதவித் தொகையை கோரும் குடும்பத்தின் மூன்றுவது குழந்தையாக இருப்பதாலோ, அல்லது தேர்வில் வெற்றி பெறத் தவறியதாலோ மத்திய அரசு படிப்பு உதவித் தொகை பெறத் தகுதியை இழந்தவர்கள் மாநில அரசு படிப்பு உதவித் திட்டத்தின் விதிகளுக்குட்பட்டு மாநில அரசு படிப்பு உதவித் தொகை பெறலாம்.

மாநில அரசு படிப்பு உதவித் தொகை பெறுவதற்கான ஆண்டு வருமான உச்ச வரம்பு ரூ. 3,000-

புதிய மாநில- மத்திய அரசு படிப்பு புதிய உதவித் தொகை மனுக்கள் கல்லூரிகளில் சேர்ந்த தினத்திலிருந்து 15 தினங்களுக்குள் படிப்பு உதவித் தொகை வழங்கும் அலுவலர்களுக்கு அனுப்பப்பட வேண்டும். புதுப்பிக்கப்பட வேண்டிய படிப்பு உதவித்தொகை மனுக்கள் கல்லூரியில் கோடைவிடுமுறை முடிந்து மீண்டும் சேர்ந்த பின்னர் உடனடியாக அனுப்பப்பட வேண்டும். எனினும் படிப்பு உதவித் தொகை மனுக்களை மாணவ - மாணவியர் அனுப்புவதற்கு நிர்ணயிக்கப் பட்டுள்ள கடைசித் தேதிகள் கீழே தரப்பட்டுள்ளது.

**புதியது**

| | | |
|---|---|---|
| 1. புகுமுக வகுப்பு சர்டிபிகேட் டிப்ளமா மற்றும் பட்டப்படிப்புகள் | ஜூன் 1978-ல் திறக்கும் கல்லூரிகளுக்கு | 15-8-78 |
| 2. ஷ | ஜூலை 1978-ல் திறக்கவிருக்கும் கல்லூரிகளுக்கு | 31-8-78 |
| 3. மருத்துவம், பொறியியல் கால்நடை மற்றும் மேல் பட்டப் படிப்புகள் | - | 30-9-78 |

**புதுப்பிதல்:**

| | | |
|---|---|---|
| 4. சர்டிபிகேட் டிப்ளமா மற்றும் பட்டப்படிப்புகள். | - | 31-7-78 |
| 5. மருத்துவம், பொறியியல் மற்றும் மேல் பட்டப் படிப்புகள் | - | 30 9-78 |

மேலே அறிவித்துள்ள கால வரம்பைக் கடந்து வரும் படிப்பு உதவித்தொகை மனுக்கள் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. படிப்பு உதவித்தொகை முதல் தவணை செல்லுச் சீட்டில் கையெழுத்திடுவதில் மாணவ, மாணவியர் காலம் தாழ்த்தினல், இரண்டாம் தவணையாக அவர்களுக்கு சேர வேண்டிய உதவித்தொகை வழங்கப்படாமல் போக நேரிடும் என்று அவர்கள் அறிவுறுத்தப்படுகிறார்கள்.

படிப்பு உதவித்தொகை மனுக்களை படிப்பு உதவித்தொகை வழங்கும் அலுவலர்களுக்கு கீழ்க்கண்டவாறு அனுப்பி வைக்க வேண்டும்.

| சென்னை நகரம்: | படிப்பு உதவித்தொகை வழங்கும் அலுவலர்கள்: |
|---|---|
| பத்தாம் வகுப்புக்குட்பட்ட படிப்பிற்கு மாநில உதவிச் சலுகைகள் அனைத்தும் | மாவட்ட அரிசன நல அலுவலர், சென்னை-600001 (இவரது அலுவலகம் மாவட்ட ஆட்சியரின் அலுவலகத்தில் உள்ளது) |
| எஸ். எஸ். எல். சி.க்கு மேற்பட்ட படிப்பிற்கான, மாநில மத்திய அரசு படிப்பு உதவித் தொகை | அரிசன, ஆதிவாசிகள் நல இயக்குனர், எழிலகம், சேப்பாக்கம், சென்னை-600005, |
| **மற்ற மாவட்டங்கள்** | |
| மாநில மற்றும் மத்திய அரசு படிப்பு உதவித் தொகை | சம்பந்தப்பட்ட மாவட்ட அரிசன நல அலுவலர்கள் |

### உரிமைச்சான்று அட்டைகள்

கல்லூரிகளில் கட்டணம் செலுத்தாமல் சேர்ந்து கொள்வதற்காக, மத்திய- மாநில அரசு படிப்பு உதவித் தொகை பெற தகுதி உள்ள மாணவ- மாணவியர்களுக்கு உரிமைச் சான்று அட்டைகள் வழங்கப்படும். இதனை பெற விரும்பும் மாணவ- மாணவியர்கள் மேற்குறித்த படிப்பு உதவித்தொகை வழங்கும் அலுவலர்களிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும்.

### காந்திநினைவு பரிசுத திட்டம்

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் அரிசன வகுப்பைச்சேர்ந்த இருவர் (ஒரு மாணவர் மற்றும் ஒரு மாணவி) 1978ம் ஆண்டு மார்ச் ஏப்ரல் திங்களில் முழு நேர பகல் கல்லூரிகளின் மூலம் நடைபெற்ற புகுமுகத் தேர்வுகளில் முதன் முறையிலேயே எழுதித் தேர்ச்சி பெற்ற மாணவ மாணவியருள் அதிக விழுக்காடு மதிப்பெண்கள் பெற்று, நடப்புக்கல்வியாண்டில் புகுமுக வகுப்புக்கு மேல் படிப்பைத் தொடரும் மாணவ, மாணவியரே இந்தத் திட்டத்தின் கீழ் உதவித் தொகை பெறத் தகுதி உடையவராவர்.

இத்தொகையினைப் பெற வருமான வரம்போ, வயது வரம்போ கிடையாது. வழங்கப்படும் தொகை முதலாண்டுக்கு ரூ. 1500 ஆகவும் பின்னர் ஆண்டொன்றுக்கு ரூ. 1000 வீதமும் இருக்கும். இந்தத்துறையால் வழங்கப்படும் மற்ற உதவித் தொகையுடன் இத்திட்டத்தின் தொகையினையும் வழங்கப்படும். சென்ற ஆண்டுகளில் காந்தி நினைவுத் திட்டத்தின் கீழ் தொகையினைப் பெற்ற மாணவ - மாணவியர்கள் இந்த நடப்பு ஆண்டிலும், பொதுத் தேர்வில் வெற்றி பெற்று தொடர்ந்து படித்துக்கொண்டிருந்தால், தாங்கள் பயிலும் கல்விநிலையத் தலைவர்மூலம் 15-8-78க்குள் இவ்வாண்டிற்கான தொகையினை பெற உரிய மனுவை சென்னை, அரிசன ஆதிவாசிகள் நலத்துறை இயக்குநருக்கு அனுப்புதல் வேண்டும். புதிய மனு அனுப்பவேண்டிய இறுதி நாள் 31-8-78 ஆகும். இந்தத் தேதிக்குப் பிறகு வரும் மனுக்கள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

### தகுதி பரிசுத்திட்டம்:

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் ஆதிவாசிகள் இனத்தைச்சார்ந்த ஒரு மாணவரும் ஒரு மாணவியும் இதேபோல் அரிசன கிறித்துவர்களைச் சேர்ந்த ஒரு மாணவரும் மாணவியும் இத்திட்டத்தின்கீழ் உதவித் தொகைகளைப்பெற தகுதியுடையவராவர். காந்தி நினைவு பரிசுத் திட்டத்திற்கான விதிமுறைகளை இத்திட்டத்திற்கும் பொருந்தும்.

### தாழ்த்தப்பட்ட அறிவுக்கூர்மையுள்ள மாணவர்களுக்கு உதவித்தொகை:

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் இந்து மதத்தைச்சார்ந்த அரிசன மாணவர்கள் இருவருக்கும் இதேபோன்று அரிசன கிருஸ்துவ மாணவர் இருவருக்கும் இந்தத் திட்டத்தின் கீழ் சிறப்பு உதவித்தொகை வழங்கப்படும் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் எஸ். எஸ். எல். சி. பொதுத்தேர்வில் மாவட்டத்தில் முதலாவதாகவும் அதற்கடுத்தபடியாகவும் அதிக விழுக்காடு மதிப்பெண்கள் பெற்று நடப்புக் கல்வி ஆண்டில் மேல் படிப்பைத் தொடரும் மாணவரே இத் திட்டத்தின் மூலம் உதவித்தொகை பெற தகுதியுடையவர். தெரிந்தெடுக்கப்படும் மாணவருக்கு மாதம் ஒன்றிற்கு ரூ.80- வீதம் வழங்கப்படும். ஆனல் மத்திய- மாநில அரசு படிப்பு உதவித் தொகையின் கீழ் வழங்கும் பராமரிப்பு-உதவித் தொகையின் கீழ் வழங்கும் பராமரிப்பு/உண்டி உறையுள் தொகை பெற்றிருப்பின் அதனை சிறப்பு உதவித்தொகையில் குறைத்துக்கொண்டு எஞ்சியுள்ள தொகையை உபகாரச்சம்பளமாக வழங்கப்படும். இந்த உதவித் தொகையினைப் பெறுவதற்கு வருமான உச்சவரம்பு கிடையாது.

முந்தைய ஆண்டுகளில் இத்திட்டத்தின் கீழ் சிறப்பு உதவித்தொகை பெற்றவர்கள், கடந்த பொதுத் தேர்வில் வெற்றிபெற்று நடப்பு ஆண்டிலும் தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தால் புதுப்பித்த உதவித்தொகையினை பெற தகுதியுடையவர்கள். இதன் விவரங்களை உரிய மனுவில் சென்ற ஆண்டுத்தேர்வு மதிப்பெண் பட்டியலுடன் தாங்கள் பயிலும் கல்வி நிலையத்தலைவர்மூலம் 31-8-78ம் தேதிக்குள் சென்னை, அரிசன, ஆதிவாசிகள் நலத்துறை இயக்குனருக்கு அனுப்ப வேண்டும். இத்திட்டத்தின் கீழ் உதவித்தொகை பெற்றவர்கள் இத்துறையினல் வழங்கப்படும் இதர உதவித்தொகைகளையும், சில நிபந்தனைகளுக்குட்பட்டு பெறத்தகுதியுடையவராவர்.

### பட்டயக் கணக்கர்படிப்பு: (Chartered Accountant Course)

ஒவ்வொரு வருடமும் தமிழ்நாட்டைச் சேர்ந்த அரிசன இந்து மற்றும் ஆதிவாசிகள் இனத்தைச்சேர்ந்த ஐந்து மாணவர் மாணவிகளுக்கு அவர்களது பெற்றோர்- பாதுகாவலர் வருடவருமானம் ரூ. 3000-க்கு மேற்படாமல் இருந்தால் பட்டயக்கணக்கர் படிப்புக்கு (3 வருடங்கள்) அரிசன ஆதிவாசிகள் நலத்துறை இயக்குநரால் படிப்பு உதவித்தொகை அளிக்கப்படும்.

### சட்டப் பட்டதாரிகளுக்கு பணஉதவி அளித்தல்:

தமிழ்நாட்டைச் சார்ந்த அரிசன இந்து மற்றும் ஆதிவாசிகள் இனத்தைச் சார்ந்த சட்டம் பயின்று வழக்கறிஞர் தொழிலை மேற்கொள்பவர்களில் ஐவருக்கு, நபர் ஒருவருக்கு ரூ. 500- மான்யமாகவும் ரூ. 750- வட்டியில்லாக் கடனகவும் வழங்கப்படும். 1-6-75க்குப் பிறகு வழக்கறிஞர் மன்றத்தில் சேர்ந்தவர்கள் தான் இவ்வுதவித்தொகை பெறத் தகுதியுள்ளவர்களாவர். இவர்களது பெற்றோர்- பாதுகாவலர் வருட வருமானம் ரூ. 3000 - க்கு மேற்படாமல் இருத்தல் வேண்டும். இந்த உதவித்தொகை அரிசன ஆதிவாசிகள் நலத்துறை இயக்குனரால் வழங்கப்படும்.

படிப்பு உதவித்தொகை மனுக்களை (அச்சுப்படிவங்களை) சம்பந்தப்பட்ட கல்வி நிலையத்தலைவர்களிடம் இருந்தோ அல்லது சம்பந்தப்பட்ட படிப்பு உதவித்தொகை வழங்கும் அலுவலர்களிடம் இருந்தோ பெற்றுக்கொள்ளலாம் தனிப்பட்ட முறையில் மனுக்களைத் தபால் மூலம் வேண்டுவோர் உபசாதி, மதம் மற்றும் எந்த வகையான மனு கோரப்படுகிறது என்பன போன்ற விவரங்களுடன் சுய முகவரியிட்டு 55 காசுகள் அஞ்சல் தலைகள் ஒட்டப்பட்ட 9''x4'' அளவுள்ள உறையினையும் அனுப்புதல் வேண்டும்.

சி. செல்லப்பன், ஐ.ஏ.எஸ்.
அரிசன & ஆதிவாசிகள் நல இயக்குனர்

DIPR-32058-78-1



## எட்மண்ட் நிகழ்ச்சிகள்

ஜூலை, 8-ந் தேதி காலை 8-45 மணி திருநெல்வேலி, மாலை திருநெல்வேலி நிகழ்ச்சிகள் 9-ந் தேதி காலை 10 மணி தூத்துக்குடி மீனவர் கல்லூரி துவக்கவிழாமாலை 5 மணி மீனவர் காலனியை பார்வையிடுதல். இரவு 8 மணி திருநெல்வேலி பொதுக்கூட்டம் 10ந்தேதி காலை தொகுதியில் சுற்றுப் பயணம், மாலையில் செங்கோட்டை பொதுக் கூட்டம், 11ந் தேதி திருநெல்வேலித் தொகுதி 12ந்தேதி, காலை 9-30மணி ஆறுமுகநேரி பெண்கள் உயர்நிலைப்பள்ளி விழா, மாலை 4 மணி வீரபாண்டியன்பட்டினம் கடலோரப் பகுதிகளை பார்வையிடுதல். 13ந் தேதி திருநெல்வேலித் தொகுதி 14ந்தேதிமாலை 4 மணிக்கு சிரதண்டநல்லூர் உயர்நிலைப்பள்ளி நிகழ்ச்சி 15ந் காலை 9 மணி குற்றாலம்.

# காளிமுத்து கிண்டல்...


(3-ம் பக்கத் தொடர்ச்சி)


புரட்சித் தலைவர் செயலாற்றி வருகிறார்.

## நவீன அரிச்சந்திரன் கருணாநிதி

கோட்டையில் கோப்புக்கள் குவிந்து கிடப்பதாக சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்வது யார்? அரிச்சந்திரன் கருணாநிதி தான்;

(சிரிப்பு)

இவருக்கு எப்படித் தெரியும்? கருணாநிதி எப்போது கோட்டையில் பியூன் வேலைக்கு வந்தார்?

(கை தட்டல்)

கோப்புக்கள் நகர்கின்றன. கோப்புக்கள் நகராமலா அதிகாரிகள் மாற்றப்படுகின்றனர். ஆணைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

கோப்புகள் எல்லாம் நாங்கள் தூக்கி எறிந்த எச்சில் இலைகள் தானே என்றுகருணாநிதிகேட்கிறார். ஒரு முன்னாள் முதல்வர் இப்படி கண்ணியம் இல்லாமல் பேசுகிறார்.

கருணாநிதிக்கு முன்பு இருந்த முதல்வர்கள் பக்தவத்சலம், காமராஜர் ராஜாஜி, குமாரசாமி ராஜா, ஓ. பி. ராமசாமி ரெட்டியார், டி. பிரகாசம் யாரும் இப்படிச் சொன்னதில்லை.

புரட்சித் தலைவர் ஒரு முறை சொன்னர். எல்லா கோப்புக்களும் நாங்கள் போட்ட எச்சில் இலை என்கிறார் என் நண்பர்.

அது எச்சில் இலை என்று தெரிகிறது. அதில் அவர்கள் எவ்வளவு சாப்பிட்டு இருக்கிறார்கள் என்றும் தெரிகிறது'' என்று புரட்சித் தலைவர் கூறினர்.

புரட்சித் தலைவரால்பேச முடியுமாஎன்றுகேட்டனர். ஆனல் நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தின்மீதுநாலரை மணிநேரம் பேசி அதைசுக்கல் சுக்கலாக தூக்கி எறிந்தார்.

இந்தியாவில் உள்ள முதல்வர்களில் நம் முதல்வர்தான் திறமையானவர் என்று புகழ் பெற்று இருக்கிறார்.

இந்தியாவில் உள்ள அனைத்து பத்திரிகைகளும் இப்போது மதுரையைச் சுற்றி வருகின்றன.

நாம் பெறப் போகும் வெற்றி எதிர்காலத்தில் நமக்கு கட்டியம் கூறும் வெற்றியாகும்.

மதுரை மக்கள் புரட்சித் தலைவரை நம்புகிறார்கள்.

அவர் பின்னல் அணி வகுத்து நிற்பதை இந்த வெற்றி நிரூபிக்கும்.

புரட்சித் தலைவரிடம் இருந்து மக்களையும், மக்களிடம் இருந்து புரட்சித் தலைவரையும் பிரிக்க முடியாது.

(கை தட்டல்)

கடலை விட்டு கடல் அலையைப் பிரிக்க முடியாது.

கதிரவனை விட்டு ஒளியைப் பிரிக்கமுடியாது. மலரை விட்டு மணத்தைப் பிரிக்க முடியாது.

அதுபோல மக்களிடம் இருந்து புரட்சித் தலைவரைப் பிரிக்க முடியாது.

(நீண்டநேரம் கைதட்டல்)

இப்போதே கமிட்டிகளை அமைத்து செயல்படுங்கள். வாக்காளர்களை சந்திப்பது யார்? விளம்பரப் பொறுப்பு யார்? பொதுக் கூட்டம் ஏற்பாடு யார் என்று கமிட்டிகளைப் போட்டு செயல்படுங்கள். வெற்றியை ஈட்டித் தாருங்கள்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினர்.

## செயல் வீரர் கூட்டங்கள்

11, 12, 13, 14-வது வட்டங்களில் செயல் வீரர்கள் கூட்டம் மாணிக்க மீனாட்சி கல்யாண மண்டபத்தில் கே. ராஜா தலைமையில் நடந்தது.

இந்தக் கூட்டத்தில் அமைச்சர் காளிமுத்து வரதராஜன் (மார்க்சிஸ்ட் எம்.எல்.ஏ.), முனியாண்டி (கம்யூனிஸ்ட்) ஆகியோரும் கலந்து கொண்டு பேசினார்கள்.

59, 60, 61வது வட்டங்களில் செயல்வீரர்கள் கூட்டம் மகால் 7வது தெரு, தூர்வாச அய்யர் வீட்டில் நடந்தது.

பிரேம்சந்த் தலைமை வகித்தார்.

இந்தக் கூட்டத்தில் அன்பழகன் எம். பி., பாலகுருவா ரெட்டியார் ஆகியோரும் கலந்து கொண்டு பேசினார்கள்.

இரவில் செல்லூர் பொதுக் கூட்டத்தில் அமைச்சர் காளிமுத்து பேசினர்.

ரெத்தினம் தலைமையில் நடந்த இந்தக் கூட்டத்தில் வரதராஜன் எம்.எல்.ஏ. தமிழ்மணி, முனவர்ஷெரிப் இருபாகரன், ஏ. கே. முருகையா, 4-வதுவட்ட வேட்பாளர் அய்யாவு, 5-வது வட்ட வேட்பாளர் சந்தனம், ஆதிமூலம் (கம்யூ) மீனாட்சிசுந்தரம் ஆகியோர் பேசினார்கள்.

## தி.மு.க.வுக்கு முழுக்கு

மதுரை 4-வது வட்ட திமு கழக முன்னாள் நகர செயற்குழு உறுப்பினர் ஆழ்வார் திமுக.விவிருந்து விலகி பொதுக் கூட்ட மேடையில் கழகத்தில் சேர்ந்தார்.

அமைச்சர் காளிமுத்து அவருக்கு கைத்தறி ஆடை அணிவித்தார்.

நேற்று நடந்த செயல் வீரர்கள் கூட்டத்தில் அமைச்சர் காளிமுத்து பேசுகையில் கூறியதாவது:

மதுரை மக்கள் நம்முடைய அணிக்கு ஓட்டு அளிக்க விரும்புகிறார்கள்

அவர்களின் விருப்பத்தை நாம்ஓட்டுகளாக மாற்ற வேண்டும். இதில் மெத்தனம் கூடாது.

வாக்காளர்களை வாக்குச் சாவடிகளுக்கு அழைத்து வருவதில் தீவிரமாக இருக்க வேண்டும்.

25 வது, 26வது வட்டங்களில் நடந்த செயல்வீரர்கள் கூட்டத்திற்கு சிவாஜி தலைமை வகித்தார். முரட்டன் பத்திரி வெள்ளையம்மன் கோயில் திடலில் இந்தக் கூட்டம் நடந்தது.

நமக்குக் கிடைக்கும் வெற்றி நம்முடைய ஓராண்டு ஆட்சிக்கு மக்கள் அளிக்கும் அங்கிகாரம் ஆகும்.

தேர்தல் நேரத்தில் சிறு தவறு ஏற்பட்டாலும் நம்முடைய எதிரிகள் அதைப் பெரிதாக ஆக்குவார்கள்.

நாம் புடம்போட்ட தங்கம் என்பதை எடுத்துக் காட்ட வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினர்.

இந்தக் கூட்டத்தில் அன்பழகன் எம். பி., சங்கரய்யா (மார்க்சிஸ்ட் எம். எல்.ஏ.) முனியாண்டி (இந்திய கம்யூ) ஆகியோர் கலந்து கொண்டனர்.

15-16வது வட்டசெயல் வீரர்கள் கூட்டம் திருமலை நாயக்கன்படித்துறை மண்டபத்தில் நடந்தது.

இந்தக் கூட்டத்தில் சங்கரய்யா (எம். எல். ஏ). வரதராஜன் (எம். எல்.ஏ) மற்றும் லட்சுமணன், சுப்பிரமணியன், கர்ணன், கதிரேசன், ஆகியோரும் பேசினார்கள்.